உ

ஸ்ரீரஸ்து

# ...வித்தியாஸாரம்.



இஃது

...மோக்ஷவித்தியா சாஸ்திரங்களின்

ஸாராம்சங்களைத்திரட்டி

...வரும் எளிதிலறிந்துய்யும்பொருட்டு

ஸ்ரீ காமாக்ஷி அருளினால்

வேதாந்த பஞ்சநதசாஸ்திரியவர்கள்

செய்தருளியதை

சிஷ்யனான

டி. பி. நாராயணய்யரால்

தஞ்சை

கிருஷ்ணவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1900.

## பிரகடனம்.

இந்த புஸ்தகம் வேண்டியவர்கள் த
டை மேலவீதியில் 124செ. வீட்டிலிரு
வெங்கடேசபட்டு அவர்களிடம் நேரிலு
யும் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை அணா 2. தாபால்கூ



# முகவுரை.

ஸ்ரீபரமானந்ததேசிக குருகடாட்சத்தால் லப்தமான விவேகக்ஞானம் என் புத்தியிற்பிரதிபலித்து வாக்கெட்டினமட்டில், ஸ்ரீ வித்யாஸாரமென்ற இக்கிரந்தம் செய்வதாயிற்று. ஸ்ரீ வித்யாஸாரமென்பது மோக்ஷவித்தை. அது அபரவித்தை பரவித்தையென்றிருவகைப்படும். அபரவித்தை, இரண்டு விதமாகும்.

அவற்றில் தர்மார்த்தங்களைச் செய்து அதன் பலங்களை யிகபரவுலகங்களி லனுபவித்து சுகமடைவது ஸகாமவித்தை.

இகபரவுலக சுகபோகங்களை வெறுத்துச் சாசுவதமாயுள்ள, பிரம்மாதி வுலகங்களில் முக்தியடைவதென்பது இருவிதமான அபரவித்தை. பரவித்தையின் பெயர் ஸ்ரீவித்தையென்று பேயர். அபரவித்தையின் உத்பத்தியான மோக்ஷபரியந்தமுள்ள வித்

ஸ்தைகளைப் பூர்வபக்ஷமாக்கி இத்தேகத்திலேயே, ஜீவப் பிரம்மைக்கியானு சந்தானுனுபவஜீவன்முக்தி யடைந்து, பிராரப்தாவசானத்தில். லோகாந்திரகமனமின்றியில் பிரம்மசுவரூபமாவதே சுத்தமோட்சம், ஜீவ வன்முக்தனுடைய பிராரப்தக்ஷயகாலத்தில், வாக்கு மனதிலும், மனது பிராணனிலும் பிராணன் உபபிராணங்களுடன்கூடி தேகாதிகளுக் கத்தியக்ஷனன ஜீவனிடத்திலும்,ஜீவன் பூதங்களிலும், பூதங்கள் நிர்குணப்பிரம்ம தேஜஸுகளிலும், அவைகளும் நிர்குணாதீதமென்ற பரதேவதையிடத்தில் லயப்படுகிறதே பரமமோக்ஷம். அது சுருதியுக்தியனுபவப்படி சித்தாந்தமாகவே யிருப்பதால் மோக்ஷவித்தையே ஸ்ரீவித்தை.அது பரதேவதானுக்கிறகத்தால கிடைக்கவேண்டியதால் அப்பரதேவதையையறிந்து உபாஸித்து அதனனுக்கிறகத்தால் சீவன் மோக்ஷமாக வேண்டியதேமுக்கியமென்ற தாற்பரியத்தைக் காட்டுகிற ஸ்ரீவித்யாஸாரமென்ற இதைவிவேகிகளின்பொருட்டு,வசனமாக இயற்றலாயிற்று. ஸ்ரீ குருப்ரயோனம

# ஸ்ரீவித்தியாஸாரம்.

1. சதுர்வித புருஷார்த்தப் பொருளாகிய தர் மார்த்த காமமோக்ஷங்களையறிந்தனுபவிக்கிரதர்க்குப் பிரமாணம் வேதம், வேதமென்ருலறிவிக்கிறது, அக்ஷர ரூபனுன பரமாத்மாவினிடத்துண்டாகி, யீசுவரா கிருதிகளினின்றும் வெளிப்பட்டு யீசுவரப் பிரசாதத்தினுல், இருஷிகளுக்குலப்பியமாயிற்று ; தபப் பிரசன்னரான வீசுவரானுக்கிறகத்தினு விருஷிகளினுடைய முகங்களிலிருந்து உச்சரிக்கப்படுகிறபடியால் வேதம் மந்திரமாயிற்று, அது யேகக்கிரந்தமா ய் ஸ்ரீவேதவியாஸாவதாரம் வரையில் வந்தது, அவர் இனியிருக்கத்தகுந்தவர்கள், இதைப்படனம் பண்ண சாமார்த்தியமுள்ளவர்களன்றென்று சிந்தித்து, தேவதாஃ வானமந்திரங்களை யெடுத்து, ருக்வேதமென்றும், கர்மப்பிரயோக மந்திரங்களையெடுத்து, எஜுர் வேதமென்றும், ஸ்தோத்திர மந்திரங்களை யெடுத்து, ஸாமவேத மென்றும், தேவதா ரகசியமந்திரங்களையெடுத்து, அதர்வணவேதமென்றும், வெவ்வேருகப்பிரித்து, தங்கள் சிஷ்யர்களுக்குபதேசித்தார், அதானது வாக்கிய ரூபமுடையது ருக்வேதமென்றும், தண்டரூபமானது எஜுர்வேதமென்றும், கானரூபமானது ஸாமவேதமென்றும், சந்தோரூபமானது, அதர்வணவேதமென்றும், 4 வேதங்களாக ...ங்குகிறது, பிரதி வேதத்துக்கு மந்திரபாகமென்

றும், பிராம்மண பாகமென்றும், இரண்டுண்டு, கர்மப்பிரயோகங்களும், தத்பலசித்திகளுக்குஞ் சொல்லப்பட்டது. மந்திரம், மந்திரார்த்தம் மந்திரசாத்தியகர்மவிதிகள், இதுகளினர்த்தவாதம், இப்படிச் செய்யென்பது விதி, செய்யாதேயென்பது, நிஷேதம், விதி நிஷேதங்களை யெடுத்துக்காட்டு மந்திரங்களுக்குப் பிராம்மணமென்றுபெயர், மந்திரங்களுக்குப் பிரதானம் சப்தம், பிராமமணத்துக்குப் பிரதானம், அர்த்தம், ஆனதால் மந்திரம் பிராம்மண ரூபமாகவே வேதம் விளங்கிறது.

2. வேதோத்பத்திக்குப் பிரணவமே பிரதானம் பிரணவத்தி னின்று வேத சாஸ்திராதிகள் பிரிந்திருக்கிறதுகள், பரமாத்மாவிடத்திலிருந்து சப்தரூபமாக முதலில்பிறந்தது பிரணவமே, அது, அகார, உகார, மகார, அர்த்தமாத்திரையுடன் கூடினது, அதில் அகாரமானது பிரக்ஞானம் பிரம்மமென்ற வாக்கியமாகவாயிற்று அந்த வாக்கியார்த்தமே ருக்வேதம், உகாரம் அஹம்பிரம்மாஸ்மியென்ற வாக்கியம் அதனர்த்தமே எஜுர்வேதம் மகாரம் தத்வமஸி என்கிற வாக்கியமாயதனர்த்தமே ஸாமவேதமாயிற்று, அர்த்தமாத்திரை அயமாத்மா பிரம்மமென்ற வாக்கியமாயதனர்த்தமே அதர்வணவேதமாயிற்று. இந்த 4, வாக்கியங்களுடைய 4 வேதங்களே ஸகலத்துக்கும் பிரமாணம் ஓ வென்ற சப்தமுண்டாகி அகார உகார மகாரங்களாகப் பிரிந்த மாத்திரம் ஜடசக்தியாயிற்று. அசப்தமாயும், அமாத்திரையாயும் மௌனாக்ஷரமாயு

முள்ள பிந்துவே சிச்சக்திஜட சக்தியுடன் சிச்சக்தி யான பிந்துசேர்ந்த மாத்திரம் சித்ஜடமான ஓமென் றசப்தமாயிற்று. ஆதலால் வேதாத்திய யனாரம்ப காலத்திலும முடிவு காலத்திலும் பிரணவோச்சார ணை பூர்வகமாக விளங்குகிறது, ஜடசக்தி ஸம்மிளித மான பிரணவ வாச்சியார்த்தமே ஜீவேசுவரஜகத், இதனிலக்ஷியார்த்தமான சிச்சக்தியே பரமாத்மா, பிரணவோபாஸகர்களான ஸந்நியாசிகள் பிரணவசமுதாயோச்சாரணத்தால் பிரம்மலோகப் பிராப்தி யடைவார்கள் பிரணவத்தைப் பிரித்து வாச்சியார்த் தத்தை நீக்கி லக்ஷியார்த்தத்தை உபாஸிக்கிறவர்கள் சுத்தமோக்ஷமடைவார்கள், ஆனதால் எல்லாமந்தி ரங்களிலும் பிரணவம் பிரதான மந்திரமாயிற்று இந்தப் பிரணவத்தில் நின்றும் உத்பத்தியான 4 மகா வாக்கியங்களின் வாச்சியார்த்த லெட்சியார்த்த தாத் பரியமான 4 வேதங்களின் விபரம்.

3 ருக்வேதத்துக்குச் சாகைகள் 21. சுக்லகிஷ் ண எஜுர்வேதத்துக்குச் சாகை 109, ஸாமவேதத் துக்குச் சாகைகள் 1000, அதர்வணவேதத்துக்குச் சாகைகள் 50, ஆகசாகைகள் 1180-க்கும் ஒவ்வொரு சாகைக்கும் ஒவ்வொரு உபநிடதவீதம் 1180 உப நிஷத்துகளுண்டு இதுகளிலுகாதி பேதங்களினால் வேதசாகைகள் க்ஷீணித்து வர்த்தமானத்திலிருக்கி றது ருக்வேதத்துக்கு, பிப்பலாயநம், ஐதரேயம் என விரண்டு சாகைகள்.

4. கிஷ்ண எஜுஸ், தைத்திரிய, ஆரண, காடகம் என மூன்று சுக்கில எஜுஸ் மாத்தியந்தினம், கண்வசாகை, வாஜஸநேயம், ஈசபிரகதராண்ணியமென நான்கு ஆகசாகைகள் 7. ஸாமவேதத்துக்கு ராணுயநீயம், தலவகாரம் என சாகைகள் 2 அதர்வண வேதத்துக்கு தேவருக்ஷு, இந்திரருக்ஷு என சாகைகளிரண்டு அந்தந்த வேதத்தின் சாகைகளுக்கு உட்பிரிவு சாகைகளுண்டு.

5. உபநிஷத்துக்கள் 1180க்கு ஸ்ரீராமசந்திர மூர்த்தியினால் ஹனுமாருக்கனுக்கிறகித்த 108, உபநிஷத்துக்கள் தானிருக்கிறது மற்றதுகள் காணப்படவில்லை ருக்வேதம் 21 சாகைகளுக்கும் உபநிஷத்துகளிருக்கிறது ஐதரேயம், கௌஷீதகிப்பிராம்மணம் நாதபிந்தோபநிஷத், ஆத்மபோதாபநிஷத், நிர்வாணோபநிஷத்முத்கலோபநிஷத், அக்ஷமாலிகோபநிஷத், திரிபுரோபநிஷத், ஸௌபாக்கிய லெட்சுமியுபநிஷத் பஹ்ரிசோபநிஷத்தென 10ம், எஜுர்வேதம் சாகைகள் 109க்கு கிஷ்ண எஜுஸில் கடவல்லியோபநிஷத், தைத்தரீயம், பிரம்மோபநிஷத், கைவல்லியம், சுவேதாசுவதரம், கர்ப்போபநிஷத், நாராயணோபநிஷத், அமிர்தபிந்துபநிஷத், அமிருதநாதோபநிஷத், காலாக்னிருத்ரம், க்ஷுரிகோபநிஷத், ஸர்வஸாரோபநிஷத், சுகாஹசியோபநிஷத், தேஜோபிந்துபநிஷத், பிரம்மவித்தியோபநிஷத், யோகதத்வோபநிஷத், தக்ஷிணாமூர்த்தியுபநிஷத், ஸ்கந்தோபநிஷத், சாரீரகோபநிஷத், யோகசிகோபநிஷத், ஏகாக்ஷரோபநிஷத்,

அக்ஷியுபநிஷத், அவதூதோபநிஷத், கடோபநிஷத், ருத்ரஹிருதயம், யோககுண்டலி, பஞ்சப்பிரம்மம், பிராணாக்னிஹோத்திரம் வராஹோபநிஷத், கலிஸந் தாருணோபநிஷத், தியானபிந்தூபநிஷத், ஸரஸ்வதி ரஹஸ்யோபநிஷத்துக்களென 32, சுக்ல எஜுஸ் ஈசாவாஸ்யம் பிரஹதராண்ணியம், ஜாபாலம், ஹம்ஸம், பரம்ஹஸம், ஸுபாலம், மந்திரிகோபநிஷத், திருசிகிப்பிராமணம், மண்டலப்பிராமணம் அத்வய தாரகோபநிஷத், பைங்கலோபநிஷத், பிக்ஷுகம், துரீயாதீதாவதூதோபநிஷத், அத்யாத்மோபநிஷத், தாரஸாரோபநிஷத், யாக்ஞவல்கோபநிஷத், சாட்டியாயநீயோபநிஷத், முக்திகோபநிஷத் என 19 ஆ உபநிஷத்துக்கள் 51-ம், ஸாமவேதம் சாகைகள் 1000க்கு கேனோபநிஷத், சாந்தோக்கியம், ஆருணிகோபநிஷத், மைத்திராயணீயம், மைத்திரேயி வச்சிரஸூச்சியோபநிஷத், யோகசூடாமணியோபநிஷத், வாஸுதேவோபநிஷத், மஹோபநிஷத், ஸந்நியாஸோபநிஷத், அவ்வியக்தோபநிஷத், குண்டிகோபநிஷத், ஸாவித்திரியுபநிஷத், ருத்ராக்ஷஜாபாலோபநிஷத், தர்சனோபநிஷத், ஜாபாலிகோபநிஷத் ஆக 16ம் அதர்வணவேதம் சாகைகள் 50க்கு பிரச்னோபநிஷத் முண்டகோபநிஷத், மாண்டூக்கியோபநிஷத், அதர்வசிரஸ், அதர்வசிகோப, பிரகத்ஜாபாலம் நிருஸிம்மதாபிநி, நாரதபரிவ் ராஜகோபநிஷத், ஸீதோபநிஷத்சரபோபநிஷத்திரிபாத்விபூதிமஹா நாராயணோபநிஷத், ராமரஹஸ்யோபநிஷத், ராமதாபநீயோபநிஷ

த், சாண்டில்யோபநிஷத், பரமஹம்ஸபரிவ் ராஜ கோபநிஷத், அன்னபூர்ணோபநிஷத், ஸுர்யோபநிஷத், ஆத்மோபநிஷத், பாசுபதப்பிரம்மோபநிஷத், பரப்பிரம்மோபநிஷத், திரிபுரதாபிநியுபநிஷத், தேவியுபநிஷத், பாவனோபநிஷத், பஸ்ம ஜாபாலோபநிஷத், கணபதியுபநிஷத், மஹாவாக்கியோபநிஷத், கிருஷ்ணோபநிஷத், ஹயக்கிரீவோபநிஷத், தத்தாத்திரயோபநிஷத், காருடோபநிஷத், கோபாலதாபினியுபநிஷத், ஆ 31ம் ஆக 108.

6. உபவேதங்கள் 4, ருக்வேதத்துக்குபவேதம் ஆயுர் வேதம் எஜுர் வேதத்துக்குபவேதம், தனுர் வேதம் ஸாமவேதத்துக்குபவேதம், காந்தர்வவேதம் அதர்வணவேதத்துக்குபவேதம், தந்திரார்த்தவேதம் உபநிஷத்துக்கள் உபவேதங்களுடன் கூடின 4 வேதங்கள் நான்கு வித்தைகளாகும்.

7. அங்கங்களாவன, ஸீக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம் ஜோதிஷம், கல்பமென ஆரும் ஆரு வித்தைகளாகும் இது வேதார்த்தங்களைப் பரிசீலித்தறிந்து அனுபவிக்கிறதர்க்கு ஹேதுவானதாகும்.

8. உபாங்கங்களாவன நியாய சாஸ்திரம், தர்மசாஸ்திரம் புராணம், மீமாம்ஸ சாஸ்திரங்களென 4-ம் நான்கு வித்தைகள் ஆகயிந்த 14 வித்தைகளுக்குள் கீழ்விவரித்துச்சொல்லப்படுகிற ஸகலவித்தைகளும் இதர்க்குள்ளாகவேயடங்கியிருக்கிறதுகள்.

9. வேதார்த்தங்களாவன எக்ஞாதி கர்மகாண்டகியானத்தையும் உபாஸனுகாண்ட கியானத்தையும், கர்மோபாஸனுபலத்தால் கிடைக்கக் கூடிய மோக்ஷங்களேயும் பிரதிபாதிக்கும்.

10. உபநிஷத்துக்களின் தாத்பரியமாவன கர்மோபாஸனுஞானமோக்ஷங்களே நீக்கி ஜீவப்பிரம்மைக்கிய சுத்தமோக்ஷத்தைக் காட்டிக்கொடுக்கும்.

11. உபவேதார்த்தங்களாவன வியாதி நிதான, வியாதிச்சின்ன, மணீ மந்திர ஔஷத சிகிச்சைகளால் ஆயுராரோக்கியங்களேக் காட்டியது. ஆயுர்வேதம் இதுவே வைத்திய சாஸ்திரம், இதற்கு கர்த்தா தன்வந்திரி, பிரகு அவர் சீஷியர்களால் அனேக சாஸ்திரங்கள் ஏற்ப்பட்டிருக்கிறதுகள்.

12. தனுர்வேதமாவது சத்துருஜயகரங்களான அஸ்திர சஸ்திராதி பிரயோகங்களேயும் அஸ்திர சஸ்திரங்களேச் செய்யக்கூடிய வஸ்துக்களேயும் காட்டத்தகுந்ததாகும்.

13. காந்தர்வவேதமாவது ஸாமவேதத்துள்ளடங்கின ஸப்தஸ்வரங்களே ஸ,ரி,க,ம,ப,த,நி,ஸ, என்றெடுத்துச் சொல்லவும் வாத்தியங்களிற் கானஞ்செய்யவும் அனேக பேதங்களுடன் கூடிய, லய, ராக, நாட்டிய வபிநயாதிகளே காட்டுகிறதாகும் இதுவே பரதசாஸ்திரமென்னப்படும்.

14. தந்திரார்த்த வேதமாவது எக்ஞாதி கர்மங்களில் தக்ஷிணை, ஆச்சியம், செரு, புரோடாசம் உப

ஹார முதலானதுகளைச் சம்பாதிக்கவும் தர்மாதி சதுர்வித பலங்களுக்கும் புண்ணியாதி கர்மங்களுககும் திரவியஸம்பாத லக்ஷணங்களையும் தானாதிதர்மங்களுக்கு தக்ஷிணை வஸ்துக்களைக் காட்டிக்கொடுக்க கூடியதாகும்.

15 7வது பாராவில் கண்ட வேதாங்கங்களின்விபரம்,ஸிக்ஷையாவன வேதங்களின் உதாத்த,அனுதாத்த ஸ்வரித, தீர்க்கப்பிரசயமென்கிற, ஸவரங்களைத்தெரியப்படுத்துகிறதாகும்.

16. வியாகரணமாவது வேதார்த்தங்களைத் தெரிந்துகொள்ள சப்த்தங்களினர்த் தங்களுக்கு தாதுக்களினிர்ணயாதிகளைக்காட்டுகிறதாகும்.

17. சந்தஸாவது அக்ஷரங்களுடைய ஸங்கியை குரு, லகுத்வம் அலங்கார லக்ஷணங்களைத் தெரியப்படுத்தும் பேதங்களுடன் கூடிலதாகும்.

18. நிருத்தம், வியாகரண லப்பியமான பதார்த்தங்களை, வர்ணாகம, வர்ணலோப, வர்ணப் பிரத்திய ப்யங்களை நிச்சியிக்கவும், வேதாந்த சித்தாந்த பதங்களுக்கு வேரு அர்த்தங்களை யேற்ப்படுத்த ஹேது வன்றியில் காட்டிக்கொடுக்ககூடியதாகும்.

19. ஜோதிஷமாவது வேதோக்த வர்ணாச்சிரம தர்மாதிகளுக்குக் கால நிர்ணயங்களைக் காட்டவும், கிரகநட்சத்திராதிகளின் உதயாதஸ்தமனங்களைக்காட்டவும், ஜனன ஜீவனுக்குப் பூர்வபுண்ய பலத்தைக்காட்டவும் ஹேதுவாயனேக பேதங்களாகவிருக்கு

ம் அதாவது சித்தாந்தம், ஸூத்திரம், ஸம்மிதை, ஹோரை என 4 விதங்களாகும், அது ஸூர்யசித்தாந்தம், ஸோமசிந்தாந்தம், பிரம்மசித்தாந்தம், வஸிஷ்ட்டசித்தாந்தமென வனேகபேதங்களாகும், ஜயமினி பிருகு முதலியவை, ஸூத்திரங்களாகும், கச்சிபசம்மிதை, கர்க்க சம்மிதை முதலானதுகள் சம்மிதைகளாகும், பாராசரீயமுதாலனது ஹோராசாஸ்திரமாகும் இதுகளுக்கு கர்த்தா கர்க்காசாரியார், கிரகங்களாற் சொல்லப்பட்டது நாடிகிரந்தங்கள், இன்னும் புத்திமான்களால் அனேக பாஷாந்திரங்களில் ஸமயோசிதமாக அனேகக் கிரந்தங்கள் செய்யப்பட்டிருக்கிறது.

20. கல்பமாவன சிரௌதஸ்மார்த்த எக்ஞயாகாதிக்கிரியைகளின் கிரமத்தை சுலபமாகநடத்தக் காட்டியது, அது போதாயனம் ஆச்லாயனம், ஆபஸ்தம்பம் காத்தியாயனம் பாரத்துவாஜம், ஸத்தியா ஷாடாதி ஸூத்திரங்களாகும் விருதாதி கல்பங்களுமிதிலடக்கம் ஆ 6

21. உபாங்கங்களாவன, ஞாயசாஸ்திரம், தர்மசாஸ்திரம்,புராணம்,மீமாம்ஸாசாஸ்திரமெனநான்கு.

22. ஞாயசாஸ்திரம், ஆன்வீக்ஷகி, தர்க்கமென்றிரண்டு விதங்களாகச் சொல்லப்படும்.

23. ஆன்வீக்ஷகி சாஸ்திரமாவது தண்ட நீதியான விராஜ்ய தந்திரங்களைத் தெரியப்படுத்துகிறதாகும்.

24. தர்க்கமாவது, தத்வமுதலான விரகசியார்த் தங்களையும், நீதி முதலானதுகளையும் வாதங்களால் நிர்ணயிக்கக் கூடியதாகும் இதுகளுக்குக் கர்த்தா கௌதமர்.

25. தர்மசாஸ்திரம், மன்வாதிஸ்மிருதிகளாகும் இதுகளுக்குக் கர்த்தாஸ்மிருதிகள் செய்தவர்களே.

26. மீமாம்ஸம் இதர்க்குக் கர்த்தாஜயமினி வேதார்த்த தத்வார்த்த விசாரணைக்காகஏர்ப்பட்டசாஸ்திரம், அது 20 அத்தியாயங்கள், அதில் பூர்வமீமாம்ஸாசாஸ்திரம் 16 அத்தியாயம், கர்மகர்த்திருப்பிரதிபாதிகமாய் 808 அதிகரணங்களோடு ஸூத்திரம் செய்யப்பட்டிருக்கிறது அவர்சிஷ்யரான சாபரவிருஷியால் சாபரமென்ற பாஷியஞ் செய்யப்பட்டிருக்கிறது, அதர்க்கு அவர்சிஷ்யரான பட்டாசாரியால் பாட்டப்பிரதீபிகையென்கிற வியாக்கியானமும், அவர்சிஷ்யரான பிரபாகரரால்பிராபாகரீய மென்ற வியாக்கியானமும் செய்யப்பட்டிருக்கிறது.

27. உத்தரமீமாம்ஸை 4 அத்தியாயம், அது 192, அதிகரணங்களுடன் கூடியது. இதுவே பிரம்ம காண்டம் இதையே ஸ்ரீவேதவியாசரால் 16 பாதங்களுடன் 500 ஸூத்திரங்களாகச் செய்யப்பட்டது. அதற்கே பிரம்ம ஸூத்திரமென்றுபேர் இதற்கு ஸ்ரீசங்கராசாரியர், அத்வைத பாஷ்யஞ்செய்திருக்கிறுர். அவர் சிஷ்யரான விவரணுசாரியரால் டீகை, அதர்க்கேவாசஸ்பதி முதலான சிஷ்யர்களால் விருத்தி பஞ்சபாதிகம், பாமதி, கல்பதரு, அதிகரணரத்ந

மாலா, ராமாநந்தீயம், பிரம்மவித்யாபரணம் ஆனந்த கிரீயம் என்றவியாக்கியானங்களும், கௌஸ்துவமென்ற டீகையுஞ் செய்யப்பட்டிருக்கிறது உத்தரமீமாம்ஸங்களுள் படவித்தை 4, ஆக வித்தை 14

28. உபாங்கத்தினிரண்டாவதான தர்ம சாஸ்திரமென்ற ஸ்மிருதிகளின் விபரம் நான்குவர்ணங்களுக்கும் நான் காச்சிரமங்களுக்கும் 18, ஜாதிகளுக்கும் ஆசாரதர்மங்களையும், மஹாபாதகங்களுக்கு பிராயச்சித்தங்களையுந் தாயபாக முதலான வியவகாரங்களையும் தெரியப்படுத்தும் ஸ்மிருதிகளைச் செய்தவிருஷிகளின் பெயாகவே யேற்பட்ட ஸ்மிருதிகளாவன,மனு,அத்திரி,ஹரித, விஷ்ணு, யாக்ய வல்க உசன ஆங்கீரச, எம, ஆபஸ்தம்ப, ஸம்வர்த்த,காத்தியாயன பிரஹஸ்பதி. சங்க, விஹித, தக்ஷ, சதாதப, வஸிஷ்ட, வியாஸ, கௌதமா திஸ்மிருதிகள்

29. உபஸ்மிருதிகளாவன தத்தத்காலோசிதமாய்ஸகல சுருதி ஸ்மிருதிகளின் தாத்பரிய மறிந்தமஹான்களாற்செய்யப்படுகிறது வர்த்தமானத்துள்ளது நிர்ணயஸிந்து, எல்லாஜீயம், வைத்தினுத தீக்ஷிதம் தோளப்பஸ் மிருதி முதலானதுகள் தர்ம சாஸ்திரமெனப்படும்.

30. உபாங்கத்தின் மூன்ருவதான புராணங்கள் கர்த்தாவியாஸர், இது ஜீவர்களுக்குத்தீர்த்தயாத்திரை, தேவாலய தரிசனம், நித்தியநைமித்தி காதிகர்மங்கள், தாந, தர்மங்கள், சிரத்தாபக்திவைராக்கிய,

ஞானங்களைத்தெரிவிக்கக்கூடியதாகும் வேதார்த்ததா ர்பரியங்களையே 18 புராணங்களாகச் செய்தார், மூ ன்றிலட்சம் கிரந்தங்களுடன் கூடின சிவப்பிரதான மான,மார்க்கண்டேய,பவிஷிய,வராக, லிங்க, ஸ்காந் த,வாமன,கூர்ம, மச்சிய, பிரம்மாண்ட, வாயவ்வியங் களெனப் புராணங்கள் 10350000, கிரந்தங்களுடன் கூடிள விஷ்ணுப்பிரதி பாதிதமான விஷ்ணு புராண ம், பாகவதம், நாரதீயம், காருடம். ஆக 4.

32. 25000.. கிரந்தங்களுடன் கூடின, பிரம்ம தேவபேரதி பாதிதமான பிராம்மியம், பாத்ம மென விரண்டு.

33. 12500 கிரந்தங்களுடன் கூடிய சூர்யப்பிரதி பாதித பிரம்மகை வர்த்தமென வொன்று.

34, 12500, கிரந்தங்களுள்ள அக்கினிப்பிரதிபா திதவாக்கினேய புராணம் ஆக புராணங்கள் பதினெ ட்டு.

35. உபபுராணங்களாவன எந்தெந்தவிருஷிகளா ற்செய்யப்பட்டதுகளோ அந்தந்தவிருஷிகளின்பெய ராலேயே விளங்கிற ஸனத்குமாரம், நாரஸிம்மம், நந் தி,சிவதர்ம்ம,தூர்வாஸ,நாரத,கபில,மனு,உசன, பிர ம்மாண்ட, வருண, காளி, வஸிஷ்ட, லிங்க, ஸாம்ப, ஸௌர, பராசர, மரீசி, பார்க்கவமென்ற வுபபுரா ணங்கள் இதுகள் வைதீகலௌகீக கர்மங்களை யனு ஷ்டித்து வரும் விதிகள், ஜாதியந்திராதிகளையுங்கா ட்டுகிறது தன் புத்திரரான ஸ்ரீசுகருக்கு அனுக்கிர கார்த்தமாய்.

36. 18000 கிரந்தங்களுடன் கூடின ஸ்ரீதேவி பாகவதமென்ற புராணம். ஆகபதினெண் புராணங்களையும், ஸ்மிருதிகளையும், வேதார்த்தங்களையும் அங்கோபாங்கங்களோடு பரிசீலித்து, ஒன்றேகாலிலக்ஷம் கிரந்தங்களுடன் கூடின பஞ்சமவேதமென்ற மகாபாரதமான இதிகாசமுஞ் செய்தார் இதையே வியாஸஸ்மிருதி என்று சொல்லப்படும்.

37. ஸ்ரீவால்மீகரால் ஸமஸ்த சுருதிஸ்மிருதி புராணங்களின் தர்மங்களைத் தெரிவிக்கத்தக்கவரான பிரம்மதேவனுடைய அனுக்கிரகததாற் செய்யப்பட்டது ராமாயணம் அது தர்மசாஸ்திர, நியாயசாஸ்திரார்த்தங்களுடன் கூடின விராமசரித்திரம் 24000 கிரந்தங்களுடன் கூடினது ராமாயணம், லோகானுக்கிரகார்த்தம் குருசிஷ்ய சம்பிரதாயப்படி ஆத்மவிசாரணை செய்து மோக்ஷமடையவேணுமென்ற மார்க்கத்தைக் காட்டுகிறதாயும் அத்யாத்மசாஸ்திரப்படியுள்ள வேதாந்ததார்ப்பரியங்களை அறிந்துணர்ந்து அனுபவிக்கக்கூடிய வாஸிஷ்ட முதலான வேதாந்த சாஸ்திரமென்ற விதிகாஸப் பிரகரணங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

38. ஆகமங்களாவன 14, வித்தைகளுக்குள்ளடங்கியிருக்கிற ஸகல தேவதாமந்திர தந்திரபக்தியுபாஸனைகளுடன்கூடி விளங்கிறதுகளாகும், அது பரமேசுவரனுடைய பஞ்சமுகங்களிலிருந்து இருபத்தெட்டாகமங்களுமுண்டாயின, ஸத்யோஜாதமுகத்திலிருந்து காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜித

மென்றைந்தும், வாமதேவமுகத்திலிருந்து, தீப்தம், ஸூக்ஷமம்,ஜகதி,ஸஅம்சுமானம்,ஸு ப்பிரபேதகமெனவைந்தும்,அகோரமுகத்திலிருந்து விஜயம், நிஸ்வாஸம், ஸ்வாயம்புவம், அனலம், வீரமெனவைந்தும் தத்புருஷமுகத்திலிருந்து ரௌரவம், மகுடம், விமலம்,சந்திரகியானம், பிம்பமெனவைந்தும், ஊர்த்துவமான வீசானமுகத்திலிருந்து புரோத்கீதம், லலிதம், ஸந்தானகம், ஸார்வோத்தமம், பாரமேசுவரம், கிரணம், பேதம், வாதூலம் என எட்டுமாகவிருபத்தெட்டாகமங்கள் அபரிமித சங்கியைகளையுடையதுகள், இதில் வேதார்த்தங்களடங்கினது இலெட்சம் கிரந்தங்கள், மாலுமிசாஸ்திரம் 16 லட்சம் கிரந்தங்கள், பரதசாஸ்திரம் முப்பத்திரண்டு லட்சங்கிரந்தங்கள், சிற்பசாஸ்திரம் அற்புதம், ஆகமசாஸ்திரம் பதினான்கிலட்சம், ஆயுர்வேத மூன்றிலட்சம், சோதிடம் நான்கிலட்சம் கிரந்தங்களுடன் கூடியது, சிவபுராணம், சிவரகசியம், சிவமஹான்மியங்கள், ஸ்தலமஹாத்மியங்கள், சக்திபுராணம், சக்திமகான்மியம், சக்திஸ்தலமகான்மியம் இப்படியே விஷ்ணு, பிரம்மா, கணேச, குமார, அஷ்டதிக்பால தேவாதி கிராமதேவதைபரியந்தம் அனேகாகமபுராண மஹாத்மியங்களேற்பட்டிருக்கிறது இவைகளனைத்தும் ஆகமசாஸ்திரங்களுளடக்கம்.

39. ஸகலசாஸ்திரங்களுடைய மர்மார்த்தங்கள் ஆதிபௌதீக, ஆதிதெய்வீக, ஆத்தியாத்மீகமென மூன்றுவிதங்களாகவிருக்கும், அவற்றில் ஆதிபௌதீ

கசாஸ்திரமாவது, பிரபஞ்சசிருஷ்டிலக்ஷணம் சிருஷ்டமான பதார்த்தங்களுள், பூகோள, ககோள நிர்ணயங்களும், ஸூர்யாதிக்கிரக நட்சத்திரகதிகளையும் ஒன்றை மற்றொன்றாக மாற்றக்கூடிய ஸித்திமுதல் அணிமாதி ஸித்திபரியந்தமுள்ள ஸித்திகளும், ஔஷதாதிகளால் வியாதிநாசனங்களும், காயகற்பசித்திகளும், ஸகல தொழில்களுடன் கூடின சிற்பங்களும் அறுபத்துநான்குகோடி வித்தைகளடங்கின, அறுபத்துநான்கு வித்யாஸ்வருபமான விந்திரஜாலாதி வித்தைகளும் 14, புவனபேதங்களுமடங்கியதாகும் இதுகளிற் பிரவிருத்தியுள்ளவர்களதுகளையே பரிசீலித்து அதுகளிற் சமர்த்தர்களாவார்கள், தவிர தெக்ஷிண திக்கில் வாஸம்பண்ணுகிற அகஸ்தியரால் திரவிடபாஷையுண்டாக்கித்தமது சிஷ்யர்களுக்கு பௌதிகார்த்தங்களையனுக்கிறகித்ததின்பேரில் அவரவர்களனுபவத்தின்படி தங்கள் புத்திக்கெட்டினமட்டும் ஔஷதவிவரணங்களையுங் காயகற்பஸித்திகளையும், தூரசிரவண, தூரதரிசனகுடிகாபாதுகாசித்தி, ஆகாசகமனமுதலானதுகளையும், பிராணதாரணை முதல் பிராணநிரோதங்களான யோகாப்பியாஸங்களையும் அதனாலுண்டாகுமானந்தானுபவத்தையும், ஈசுவரனைப்போல தாங்களுஞ்சகத்திலனேக விநோதங்களைச்செய்தடையும்படியானவனேக ஸித்தர்களால், அனேகசாஸ்திரங்கள் செய்யப்பட்டிருக்கிறது, இவ்வனுபவத்தாற் ஜீவனுக்கஞ்ஞானபந்தங்கெடாது.

40. ஆதிதெய்வீகசாஸ்திரமாவது அது தேவதாப்பிரதானமுடையது பிரம்ம, விஷ்ணு, உருத்திர,

மஹேசுவர ஸதாசிவாதி, கிராமதேவதை பரியந் தமுள்ள தேவதைகளையாராதித்து அத்தேவதாப் பிரஸாதத்தால் பக்தி, க்ஞான, வைராக் கியமு ண்டாகி அதனுலிகலோக ஸுகங்களை வெறுத்து முக்குணங்களின் பிரிவுப்படி ஸாத்வீகர்கள் சிவன் முதலானவுத்தமதேவர்களை மனதினுலும், இராஜத ர்களத்தேவதைகளையே பூவுலகத்திற் பக்தானுக்கிரக த்திற்கேற்பட்டு ஆலயங்களிற்ருபிக்கப்பட்ட விக்கி றகாராதனங்களையுந் தாமதர்கள் எக்ஷாதி கிராமதே வதாந்தமுள்ள விக்கிறகாராதனங்களையும், ஸாத்வீக ராஜதமுடையவர்கள் மனதினுலும், விக்கிறகாராத னத்தினுலுமாராதிக்கக் கூடியதென்று காட்டத்தகுந் ததாகும், இது வேதத்தில், கர்மோபாஸனகாண்டம், புராண, உபபுராண, ஆகம இதிகாசாதிகளின் கருத் துகளடங்கினதாகும்இதுகளின்படி தீர்த்தயாத்திரை, விருத, தர்ம, தானங்கள், நித்திய, னைமித்திக, காம் மியபிராய்ச்சித்தாதி கர்மங்கள், யக்ஞ, யாகாதிகிரு துக்கள், பக்திக்ஞான வைராக்கிய, யோக, தபசு, தியான முதலானதுகளும் சரியா, கிரியை, யோக ஞா னங்களுமடங்கியதாகும்.

41. இவ்வர்த்தங்களையே, ரதி, ஸ்தாயிபாவ,ஶ்ரிங் கார ரஸமும் உத்ஸாஹஸ்தாயி பாவவீர ரஸமும், சோகஸ்தாயிபாவ கருணுரஸமும், பீபத்ஸஸ்தாயி பாவ, பயானக ரஸமும் ஜிகுப்ஸாஸ்தாயிபாவ, பீப த்ஸ ரஸமும் குரோதஸ்தாயிபாவ, ரௌத்திர ரஸ மும், ஹாஸஸ்தாயிபாவஹாஸ்ய ரஸமும், விஸ்மயஸ்

தாயிபாவ, அத்புதாஸமும், சாந்தாஸ்தாயிபாவ சாந்தரஸம் வரையிலுள்ள நவரசங்களுடன் கூடின, காவ்ய நாடகாலங்கார சாஸ்திரங்களும் ஸ்தலமஹாத்மாதி சாஸ்திரங்களும், மஹாகவிகளால் அனேக கிரந்தங்கள் செய்யப்பட்டிருக்கிறது.

42. இதன்றுற் பரியம், ஸத்துவகுணப்பிரதானர்கள். உளர்த்துவ உலகங்களான, கைலாஸ, வைகுண்ட முதலானவுத்தமவுலங்களி லவ்வுலகாதிபதிகளின். ஸாலோக்கியாதி பதப்பிராப்தியே நித்தியஸித்தமோக்ஷமென்றும், அதிற்றுவைதிகள் ஸாலோக்கியஸாமீப்பியமே,முக்கிய முக்த்தியென்றும்,விசிஷ்டாத்வைதிகள், ஸாரூப்பியமடைவதே முக்கிய முக்தியென்றும், அத்வைதிகள், ஸாயுச்சியமடைவதே முதியென்கிற தாற்பரியத்தால் இவர்களுக்குப் புனராவாத்தியில்லை யென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது இஃதே,ஸத்வகுண ஸ்தர்களினி லக்ஷணம்.

43. ஸத்வரஜோகுண முடையவர்களினிலக்ஷணம் சுத்ததேவதைகளை மனதினலே தியானஞ்செய்யவெத்தனித்து நிலைபடாமற் பாஹியவிக்கிரகாராதனங்களைச் செய்துகொண்டு மனோதியானமே முக்கியமென்றவர்களாவார்கள், இவர்களுத்தம வுலகத்திற் சாலோக்கியாதி பதவிகளை யடைந்து, மருபடியுமானிடனுகப் பிறந்து மனுஷிய போகங்களை யனுபவித்து, மனோதியானங்களைச் சம்பாதித்துத் திரும்பிப் பிறவாமலிருக்கிற வுத்தமவுலகங்களிற் சாலோக்கியாதிபதவிகளை யடைவார்கள்.

44. ரஜோகுணப் பிரதானமுடையவர்கள் விக்கிரகாராதனமே முக்கியமாக வினைத்துமனுஷியபோகங்ளுடன் கூடிவிக்கிற காராதனங்களைச் செய்து கொண்டிருப்பார்கள் அவர்கள் புண்ணிய பாவத்துக் குத்தக்கப்படி ஜாதிகளிற் செனமமடைந்து, ஆஸ்திக, நாஸ்திக, லௌகீகர்களாயிருப்பார்கள் இவர்களுக்குப் பரலோகானுபவங்களில்லை.

45. தமோகுணப்பிரதானமுடையவர்கள் எக்ஷாதி தெய்வங்களுக்குப் பலியாராதனங்களைச் செய்து கொண்டு குரூரகன்மங்களைச் செய்து வருவார்கள் அதன்பயன் புண்ணியபாபங்களுக்குத் தக்கபடி தாமதஜாதி ஜன்மங்களையெடுத்து மூடர்களாயும் அபஸவ்விய மார்க்கத்தால் தனப் பிராப்தியடைந்து மருபடிகுரூரகர்மத்துடன் கூடிபாவிகளாகவே யாவார்களென்ற கருத்துக்களடங்கிய சாஸ்திரமாகும்.

46. அத்யாத்மீக சாஸ்திரமாவது ஜீவப்பிரம் மைக்கியஸா க்ஷாத்காரஞானயோகானுபவத்தால் ஜீவன் முக்த்தர்களாகி பிராரத்துவாவஸான காலத்தில் விதேகமுக்தியான பரமமோக்ஷமடைவதைக் காட்டிக் கொடுக்கக் கூடியதாகும்.

47. மேலுள்ள வித்யாரூபமான சாஸ்திரங்களின் ஜாதியாசார தெய்வபேதங்களால் அனேக மதங்களாகவேற்பட்டிருக்கின்றன.

48. மதங்களினிரூபணம்,பிராணிகளினுர்ப்பத்தி நாசம் சுவபாவமேதவிர கர்த்தாவென்ற யீசுவரனில்லவே யில்லையென்ற ஸ்வபாவவாதிகள்.

49. ஸ்வபாவத்தாலுண்டான தேகமே யாத்மா மறணமே, மோக்ஷமென்ற சார்வாகர்கள்.

50. இந்திரியங்களே யாத்மா அதுகளின்நாசமே மோக்ஷமென்ற சார்வாகயேக தேசிகள்.

51. பிராணனே பரமாத்மா;வதின்னாசமே மோக்ஷமென்கிற சௌகதர்கள்.

52. தேகேந்திரியப் பிராண ஸங்கோச விகாஸாவஸ்தையுடையவனே யாத்மா, பரமாணுரூபமுடையவனாகி அலௌகீகாகாசமத்தியில் கிரமக்கிரமமாக ஸஞ்சரிப்பதே மோக்ஷமென்கிற ஜயினர்கள்.

53. புத்தியே யாத்மா, ஸுகதுக்காதி துவந்துவந்தங்களையொட்டாமல் சுத்த புத்தியுண்டாகி விளங்குவதே மோக்ஷமென்ற பௌத்தர்கள்.

54. சூன்யமே ஆத்மா அதிலயமடைகிறதே மோக்ஷமென்ற அர்ஹதமாள்.

55. ஜலத்திற்குமிழியுண்டாவதுபோல சூன்னியத்திலிருந்து வெகுரூபங்கள் தோற்றுவதே யாத்மா, அந்த உருவங்களை விட்டு சூன்னியத்திலயமடைகிறதேமோக்ஷமென்ற க்ஷபணர்கள்.

56. ஆனந்தமேயாத்மா, ஆகாசகமன, தூரதிருஷ்டி தூரசிரவணாதி ஸித்திகளுண்டாகி விளங்குவதே மோக்ஷமென்ற பைரவயாமள கௌளர்கள்.

57. ஆனந்தோத்போதகங்களான மதுமாம்ஸாதி ஸங்கங்களால் ஆனந்தபிராப்தியே மோக்ஷமென்ற லௌகிகசாக்தேயர்கள்.

58. சூன்னியமே ஆத்மா, ஸமுத்திரத்திலலைநுரைகுமிழிகளுண்டாய் அதிலேயே லயப்படுகிறது போல்சூன்னியமே அனேகாகிருதிகளாகப் பரிணமித்து அதிலேயே லயப்படுவதாகையால் மோக்ஷப்பிரயத்தின மனுவசியமென்ற பரிணாம வாதிகள்.

59. சூன்னியத்திலிருந்து பிரகாசசக்தியுண்டாகியதுவேயிப்படிப்பரிணமித்ததேயொழிய, சூன்னியமாத்திரம் பரிணமியாது அதுவெலயப்படுத்திக்கொள்வதென்ற பரிணாமவேகதேசிகள்.

60. தேக, புத்திர, மித்திர, பசு, பிருத்தியாதிகளேயாத்மா,அவைகளுக்காதிவியாதியன்றியில் அவர்களுடன் கூடி சுகிப்பதே மோக்ஷமென்ற லௌகீகர்கள்.

61. ஸமயோசிதமானவனேக வீசுவராவதார பேதங்களில் துவீபதேசவாஸிகளான அதிகாரிகளுக்குத்தகுந்த அம்சாவதார புருஷனுண்டாகி யந்த தேச வாஸிகளுக்குத்தக்கபடி யனுக்கிறகித்த சப்தார்த்த தாற்பரியப்படி யனுக்கிற கித்தபுருஷனேயே தெய்வமாக நம்பி யவ்வித மனுஷ்டித்தவர்களுக்கு அவரால் மோக்ஷங்கிடைக்குமென்றும் அவ்விதம் நடக்காத பக்ஷத்தில் அவரால் நரகதுக்கமனுபவிக்கச் செய்யப்

படுமென்றும் அறிந்து அவ்விதம் நடந்து வருவதே மோக்ஷமென்ற குருமதவாதிகள் அதிலனேகபேத மதவாதிகளுண்டு.

62. ஸர்வ ஜகத்துக்குமதிஷ்டானமான பிரம்மமே சத்தியம், பிரம்மத்தினிடத்தாரோபமாகத் தோற்றுகின்ற ஜீவேசுவர ஜகத்தனைத்து மித்தையே, ரச்சுவில் ஸர்பத்தைக்கண்டு பயந்ததுபோல ஜகத்தைப்பார்த்துப் பிரமித்தோம், விசாரித்தால் ரச்சுவில் ஸர்ப்பமில்லாமல் ரஞ்சுவே மிஞ்சினதுபோல நாமும் பிரம்மஸ்வருபத்தை விசாரித்துப்பார்த்தால் பிரம்மமேயிருக்கிறதேதவிர ஜகத்தேயில்லை நாமும் பிரம்மந்தானென்ற அபிப்ராயமே தவிர அனுபவமின்றி சாஸ்திரவாக்ஞாலங்களினல்மட்டுந்தெரிந்துவாதித்து வர்ணாச்சிரமதர்மமிழந்துஸ்வயிச்சாஸஞ்சாரமுடையவர்களாயிருத்தலையே மாயாத்வைதமென்றும், விவர்த்தாத்வைதவாதமென்றும் சொல்வார்கள்,

### வைதீகமதங்கள்.

63.
| | |
|---|---|
| சைவம் | 1 |
| வைஷணவம் | 2 |
| காணுபத்தியம் | 3 |
| ஸௌரம் | 4 |
| வைதீக சாக்தேயம் | 5 |
| காபாலிகம் | 6 |
| இதற்குதெய்வம், பைரவன். | |

இவ்வாறு மதஸ்தர்களும் அந்தந்த மதாதிஷ்டான தேவதையே பிரதான புருடனென்றங்கீகரீத்து பக்தி ஞானவைராக்கியங்களுடன் அந்தந்த தேவதோபாஸனங்களால் பிரஸன்னமடைந்தவர்களாகி அந்தந்தவுலகத்தில் சாலோக்கியாதிப தப்பிராப்தி யடைவதே மோக்ஷமென்ற ஷண்மதஸ்தர்கள்,

64. சுவதஸித்தப்பிரமாண ஸமேதனே யாத்மா, ஸ்வர்க்க,கைலாஸவைகுண்டஸத்திய லோகாதிகளில் ஸாலோக்கியாதி பதமடைவதே மோக்ஷமென்ற பூர்வ மீமாம்ஸகர்களான பாட்டப்பிரபாகரர்கள்.

65. ஆகாசம் போலமிதமில்லாமல் சிலையைப் போல ஜடரூபனுகி மனேபுத்தி தர்மங்களையுடைய வனே யாத்மா, சரீரேந்திரி யாதிகளென்கிறதுக்கங் களின்றி கல்லைப்போற்றடஸ்தமாகவிருப்பதே மோக் ஷமென்ற, தார்கீக, நையாயிக, வைசேஷிகாள்.

66. ஆகாசம் போல ஒன்றிலுமொட்டாமல் ஞா னஸ்வருபனுக விளங்கிறவனே யாத்மா யோகாப்பி யாசத்தால், மனேலயமுண்டாகி அக்ஞானம் நசிப்ப தே மோக்ஷமென்ற பாதஞ்சலிமதஸ்தர்கள்.

67. நித்தியவியாபகரூபனே யாத்மா அவர்ஸர்வ க்ஞர் ஸர்வபரிபூர்ணன் தான்கிஞ்சிக்ஞனென்றெண் ணி அந்த ஆத்மாவிடத்திற் கெப்தி யுடையவனுயிரு ப்பதே மோக்ஷமென்ற பாசுபதர்கள்.

68. கர்த்திருத்வாதி யபிமான ஸம்ஸாரத்துக்கு வேருபட்டவனே யாத்மா அதைவிட்டு பகவானி டத்தில் கெப்தி யுண்டாயிருப்பதே மோக்ஷமென்ற காபாலிகமகா விருதஸ்தர்கள்.

69. நித்தியவியாபகஞானகிரி யாஸ்வரூப பரம சிவனே ஆத்மா, ஷடத்துவாதீத பரமசிவஸமானத்வ மே மோக்ஷமென்ற வீரசைவ, மாந்திரிகசைவ மதஸ் தர்கள்.

 

70. ஸர்வோத்தமன் ஸமானரகிதனுன ஸ்ரீமந்நாராயணனே பரமாத்மா அவனையுபாஸித்து யிகத்திலுண்டான ரூபப்படிப்பரலோகத்திலுமவ்வித திவ்விய ரூபமடைந்து அவநுலகத்திற் போய் வசிப்பதே மோக்ஷமென்ற துவைதமஸ்தர்கள்.

71. நாடிமத்தியத்தில் அணுபரமாணுஸ்வ ரூபநாய் விளங்குகின்ற 26-வது தத்வநான, பரம், வியூகம் விபவம், அர்ச்சை அந்தர்யாமி என்கிற வுருவங்களுடன் விளங்குகிற வாஸுதேவனே யாத்மா அவனிடத்திற்சுவரூப ஹானியன்றியில் கைங்கரியபரனுக விருப்பதே மோக்ஷமென்ற பாஞ்சராத்திராதிவிசிஷ்டாத்வைதிகள்.

இதிற் பரமாவது பரமபதம்

வியூகமாவது, வாஸுதேவ ஸங்கர்ஷண, பிரத்தியும்ன அனிருத்தங்கள் அதில் வாஸுதேவ வியூகம் பரமபதம் ஸங்கர்ஷண வியூகம் பாதாளவுலகம் பிரத்தியும்ன வியூகம் க்ஷீராப்தி அனிருத்த வியூகம் மேருபர்வதம்.

விபமாவது ஸ்ரீ ராமகிஷ்ணுதியவதாரங்கள்

அர்ச்சையாவது, வேங்கடாசலம், ஸ்ரீரெங்கம், காஞ்சி முதலிய விக்கிறகாராதன ஸ்தலங்கள்.

அந்தர்யாமியாவது ஜீவனையே தேகமாகவுடைத்தான வாஸுதேவன்

72. சிரௌதம், நான்கு வேதங்களிலுள்ள எக்ஞ சம்பந்த மந்திரங்களை தனியாகப் பிரித்தெடுத்து அந்தந்த எக்ஞத்துக்குரிய மந்திரங்களைத் தண்டமாகச்சேர்த்து அத்தியயனம்பண்ணி அந்தந்த பிரயோகார்த்தங்கள்படி நடத்தக்கூடியது இது எக்ஞ ஸம்மந்தப் பிராம்மணுளிடத்தில் விளங்கும்.

73. ஸ்மார்த்தம் அதாவது சுருதிஸ்மிருதிப் பிரகாரம் அனுஷ்டானம், பூஜை பஞ்சாயதனம் ஸகலாவ தாராவஸரங்களையும் ஸகல விருதங்களையும் சிரௌத ஸ்மார்த்த விஹித கர்மங்களையும் அனுஷ்டிக்கத் தகுந்தவர்கள் ஓரெசை தன்னியம் அனேகாகாரங்களாய் விளங்கிற படியால் எதையாராதித்தபோதிலும் பரப்பிரம்மத்தையே யாராதித்த பாவமுடைவர்களாதலால் இந்தமதத்தையே அத்வைத மதமென்று சொல்லப்படும். இந்தமதாபிப்பிராயத்துக்கே ஸ்ரீசங்கராசாரியர் ஸகல சாஸ்திரங்களையும் பரிசோதித்துப் பார்த்து ஸகலமதங்களையுங் கண்டித்து 108 உபநிஷத்துகளுக்குள் 10 உபநிஷத்துகளுக்கும் வேதாந்தசாஸ்திரமாகிய வியாஸஸூத்திரத்திற்கும் பாரதவிரெத்தினமும் வேதாந்தஸ்மிருதியுமான ஸ்ரீபவத்கீதைக்கும் அத்வைத மதஸ்தாபனுத்வைத பாஷ்யம் செய்திருக்கிறுர், வைராக்கிய, சிறத்தாபக்தி, தியான, யோகங்களுடன் பிரம்மோபாஸ்தை பண்ணினவர்கள். சுக்ல மார்க்கத்துவரா பிரம்ம லோகமடைந்து பிரம்மணுஸஹ மோக்ஷமடைவார்கள் என்கிற அத்வைதமத பாஷ்யம்.

மேற்சொன்ன 10 உபநிஷத்துக்களுக்கும் வியாஸ ஸூத்திரத்துக்கும் பகவத்கீதைக்கும் ஸ்ரீ ராமாநுஜாசாரியரால் விசிஷ்டாத்வைதபாஷ்யமும் அதற்கே ஸ்ரீ மத்வாசாரியரால் த்வைதபாஷ்யமும் செய்யப்பட்டிருக்கிறது. த்வைதவிசிஷ்டாத்வைதபாஷ்யங்களும் அபரவித்யாஸ்வரூப ஸகுண நிர்குண உபயாத்மக யீசுவரப்பிராதானியமாகவும் அத்வைதபாஷ்யம் அரூபப்பிரம்மப்பிரதிபாதனமாகவுமிருப்பதால் பரோக்ஷக்ஞானத்துக்கே ஹேதுவாகவிருக்கிறது. பரோக்ஷக்ஞானமும் காமக்குரோதாதி விருத்திகளை நீக்கி சிரததாபத்தித்யான வைராக்கியங்களுடன் அப்பியாசித்தாற்றான் பரலோகமாவது கிட்டும் கேவலம் வாக்ஜாலாப்பியாச பாடவத்தினாற் பரவுலகங்கிட்டுவது துர்லபமேயாகும் ஆகையால் சாஸ்திராப்பியாசாதி ஸகலப்பிரவிருத்திகளும் சிரேஷ்டவித்தையாகாது. அரூபப்பிரம்மவாதாத்வைத ஸித்தாந்தமானது மௌன பரியவஸாயத்தையடைகிறது. மூகதுல்லியாத்வைதவாதத்தில் விஜய மெப்படியுண்டாகும் ஸகுண வாதத்திலோ விஜயம் கன்காப்பிரவாகம் போலேற்படுகிறதே யென்று ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியைப் பிரம்மதேவர் கேட்டதற்கு ஸ்வாமியினுலுத்திரமாவது, விவர்த்தவாதப்பிராதான்னிய அரூபாத்வைதப்பிரம்மத்தைப் பிரதிபாதித்தால் மூகசமான மௌனபதுவாஸ்தவமே சகுண ப்ரதிவாதிகள் வாதம் ஆயிரங்காக்கைகளுக் கோர் கற்போல் எடுபட்டுப்போய் விடுமாதலால் துவை

தாத்வைத விசிஷ்டாத்வைதவாதிகளுக்கு அபிமான வாதத்தால் ஜயமேகிட்டாது. சித்ரூப கிர்குணப் பிரம்மாத்வைதானுபவமே பரவித்தையாகும். சுருதியிலிரண்டு வித்தைகளையுஞ்சொல்லி பரவித்தையைமட்டில் ஸித்தாந்த பக்ஷமாக தீர்மானஞ் செய்யப்பட்டிருப்பதால் பரவித்தையிலேயே பழகல் வேண்டும்.

முதல்பாக முற்றும்.

## 2-வது பாகம்.

74. அத்தியாத்மிக சாஸ்திரமாவது ஜீவப்பிர தானமுடையது, அச்சீவனுல் ஜகத் சிருஷ்டிக்க ஹேதுவாகாது, சிச்சக்த்தி ஜடசக்தியுடன்கூடி யீசுவர வடிவமாகி, சிருஷ்டித்த எழுவகைத்தோற்றமான ஸ்தூல ஸூட்சுமசரீரங்களிற் சீவன் பிரவேசித்து, பந்தமோக்ஷசுக துக்கானுபவத்துக் கேதுவானவனுனதாலதர்க்கு முதலில் ஈசுவர ஜகசிருஷ்டி நிருபணஞ் சொல்லப்படுகிறது.

75. சுத்தசைதன்னியம் சிச்சக்தியுடன் கூடின மாத்திரம்மாயாசக்தியான ஜடசக்தியுண்டாயிற்று. உண்டான சக்தியை யொருவராலுமறியக் கூடாமையால், அது,ஸத்,அசத்,ஸதஸத்தென்று சொல்லப் படாமல் அனிர்வசனியமென்று சுருதிகளாற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. சிச்சக்தியென்பது சைதன்னியத்தினுடைய ஸாமர்த்தியமே. அந்த ஸாமர்த்தியத்தினுள் அந்த சக்தியடங்கியிருப்பதால் ஸர்வ சக்திகளுடன்கூடினது நிர்க்குணப் பிரம்மமென்று சுருதியறிவித்தது. அச்சக்திகளும் நிர்க்குணமே, சக்திக்கும் சக்தனுக்கும் பேதமில்லை.

76. இன்னிர்க்குணப் பிரம்மசக்தி ஜடசக்தியிற் பிரவேசித்ததால், ஜடசக்தி மூன்ருகப்பிரிந்ததில், முதற்குணமான ஸத்வகுணமவ்வியக்தமென்ற மாயையும், இரண்டாவது குணமான ரஜோகுணம், மகத்தத்வமென்ற புத்தியும், மூன்ருவதான தமோகுணம் அகங்கார தத்வமுமாக வாயின.

77. முதற்குணமான சத்வகுணத்தில் நிர்குண ப்பிம்மம் பிரதிபலிக்க, அப்பிரதிபலனமும், ஸத்வ குணமாயையும், சிச்சக்திவியாபகமுங் கூடி, அந்தர் யாமி அவ்வியாகிருதன் என்ற வீசுவரபாவமடைந் தது, அவ்வீசுவரன் ஸர்வக்ஞன், ஸர்வசக்தியுடை யவன்.

78. இரண்டாவது குணமான மஹத்தத்வமென் றரஜோ குணமாயையில் அவ்வீசுவரன் பிரதிபலித்த மாத்திரம், அந்த பிரதிபலனமும், ரஜோமாயையுஞ் சிற்சக்திவியாபகமுங்கூடி யீசுவரனே, ஹிரண்ணிய கர்ப்பன்மஹாப்பிராணன் ஸூத்ராத்மாவென்ற ஜீவ ரூபமானன்.

79. மூன்றாவது குணமான தமோகுண தத்வத் தில் ஈசுவரஜீவன் பிரதிபலித்தமாத்திரம் தமோமா யைப் பிரதிபலனமும் சிச்சக்திவியாபகமுங்கூடி யீசுவரனகங்கார தத்வமானன்.

80. ஸத்வகுண ஸ்தனன அந்தர்யாமி யீசுவரன் தமோமாயாஹங்கார தத்வத்தை ஈக்ஷித்ததால், தமோ மாயா ஹங்காரமானது விக்ஷேபாவரணமென விர ண்டு சக்திகளாகப் பிரிந்தது. அதிலாவரணமீசுவர ஞானத்தை மறைக்காமலீசுவரனை யாவரித்துக்கொ ண்டது. அவ்வாவரணத்தை யீசுவரன், இச்சாக்ஞா ன கிரியாசக்திகளாலீக்ஷித்துப் பிரவேசித்ததால், ஆவரணம்குக்குடாண்டம் போலாயிற்று. அண்டத் துக்குள் வியாபித்த யீசுவர ரூபமான சிச்சக்தி,

அண்டத்துக்குள்ளடங்கியிருந்த விக்ஷேபசக்தியுடன் சேர்ந்தமாத்திரம், சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்களென்ற பஞ்சதன் மாத்திரைகளாக வாயிற்று.

81. சப்தத்தில் தேசசக்தி பிரவேசித்ததால், ஆவரணத்துளடங்கின வாகாசமும், ஸ்பரிசத்தில் தேசசக்தி பிரவேசித்த மாத்திரம், சப்தஸ்பரிசசலனவுருவமான வாயுவும், ரூபதன் மாத்திரையிற் பிரவேசிக்க, சப்தஸ்பரிச ரூபமென்ற வக்கினியும், ரஸதன் மாத்திரையிற் பிரவேசிக்க, சப்தஸ்பரிசரூபரஸமென்ற அப்புவும், கந்த தன்மாத்திரையில் பிரவேசிக்க சபதஸ்பரிசரூபரஸ கந்தங்களென்ற ஐந்து குணங்களுடன் கூடின பிருதிவியுமாயிற்று.

82. அவைகளில் திரவியசக்தி பிரவேசித்தமாத்திரம், ஒவ்வொன்றும் தனித் தனி திரவியங்களான பஞ்சபூதங்களாகவும், அதிற்காலசக்தி பிரவேசித்து, உத்பத்திபாலன ஸம்ஹாரங்களைச் செய்யக் கூடியதாகவும், அதிலிச்சாசக்தியாலிந்த பூதங்களினின்றும் எழுவகைத் தோற்றமான தேகங்களை சிருஷ்டிக்கும்படி யிச்சையுண்டாய், பஞ்சீகரண சம்மேளனமாகவும், பஞ்சீகரணத்தில் கிரியாசக்தியுஞ் சிருஷ்டிசக்தியுங்கூடி எழுவகைத் தோற்றமான பௌதீகசரீரங்களாகவுஞ்செய்து, அதில் பிராணசக்தி ஒவ்வொரு சரீரங்களிலும் தனித் தனியே பிரவேசித்து, பிரதிசரீரங்களையும் பரித்துக்கொண்டது. இதுவே ஸமஷ்டி வியஷ்டி யுருவமான வீசுவரஸ்தூல கற்பனையே யீசுவரஸ்தூல தேகம், இதோடுகூடிய வீசுவர

னுக்கு விராட், வைசுவாநரன், வைராஜஸன், விஷ்ணு, முதலிய நாமங்களாகும்.

83. ரஜோமாயா வுருவமான ஜீவசைதன்னியம், சிச்சக்தியா லீக்ஷிக்கப்பட்டு, மனசக்தி யென்ற, ஸங்கற்ப நிச்சய தாரணையபிமானங்களுடன் கூடின, அந்தக்கரணமே க்ஞான, கர்ம, பிராணேந்திரிய, இச்சாத்வேஷ, ஸுக, துக்க, சேதனுதைர்யாதிகளுடன் கூடி ஸூக்ஷ்ம சரீராகாரத்தையடைந்தது.

84. அதில் ஸூக்ஷ்ம சரீரமடைந்த வந்தர்யாமியீசுவர வுருவமான சிச்சக்தி வியாபித்துப் பிரவேசித்தமாத்திரம் அதினின்றுமனேக பின்னும்சங்களான ஸூட்சும சரீரங்களுண்டாகி பிரதி சரீரங்களிலும், ஒவ்வொரு ஸூட்சுமசரீரம் வியாபித்துக் கொண்டது. காரணத்திருகுணத்தினின்றும் காலசக்திவுருவமான சிச்சக்தி யீக்ஷித்ததால், அம்சங்களாகப் பிரிந்து, கார்யத்திருகுண மென்ற பெயருடன் கூடி யொவ்வொரு ஸூட்சும சரீங்களிலும் முக்குணங்கள் பிரவேசித்ததால், லிங்கசரீரம் குணவடிவாக வாயிற்று.

85. ஸமஷ்டியான ஹிரண்ணிய கர்ப்பவுருவ ஸூட்சும சரீரமடைந்த ஜீவசைதன்னியம், கார்யத்திரு குணத்துடன் கூடினமாததிரம், தமோகுணப் பிரதான வுருத்திரனும், ரஜோகுணப்பிரதான பிரம்மாவும், ஸத்வகுணப் பிரதான விஷ்ணுவுமாகப் பிரிந்து, ஸிருஷ்டிபாலன ஸம்ஹாரஞ் செய்யக்கூடியவ

திகாரங்களை யடைந்தார்கள். இஃதேவ—ருக்ஷுமகர்ப்பனை இம்மூவர்களும் ஸமஷ்டிஜீவரூபாள்ளானதால், இவர்களும் ஸர்வக்ஞர்களாயும் ஸர்வசக்தியுடையவர்களாயும் விளங்குவார்கள்.

86. முதல் மாயையான அவ்வியக்தாந்தர்யாமியான வீசுவரன், பிரதி சரீரங்களிலும், பிரதி பூதங்களிலும் வியாபித்து, பஞ்சபூதங்களி லடங்கியிருக்கிற சக்திகளைத், தொழில்கள் செய்யும்படிக்கும் ஸ்தூல சரீரசம்பந்தமான ஸு—ருக்ஷுமத்தில் வியாபித்து, அதிலுள்ள ஸத்வகுணத்தால் இந்திரியாதிஷ்டான தேவதாகிருதிகளை யடைந்து, இந்திரியங்களை விஷயானுபவஞ் செய்யும்படி நியாமிக்கிறபடியால், அந்தர்யாமியென்ற வீசிவரகாரணமாச்சுது. இஃதேகாரணதேககற்பனை. அவர்க்கே வாசுதேவன், மஹேசுரவரன், முதலான நாமங்கள்.

87. முதல் மாயையான ஸத்வகுண அவ்யக்தாவரணமே காரணம், 2வது மாயையான, ரஜோமஹத்தத்வஜீவனே காரியம், தமோகுண விட்சேபாவரணவுருவமான, அகங்காரவுருவமே கர்த்திருத்வம். இந்த கார்யகாரணகர்த்திருத்வமே பிரதிசரீரங்களிலும் பின்னகார்ய காரண கர்த்திரு வுருவமாகவாகி அததர்க்குத் தக்கபடி விளங்குகிறது. இவ்விதமான ஜகத்தானது, காரணே சுவரனிடத்தி லடங்குவதே பிரளயம். விரிந்து விளங்குவதே சிருஷ்டி. பாலன, ஸம்ஹாரரூபம். இக்கர்ப் பனையே கிரமசிருஷ்டியாகு

ம். இதையே புராணாதிகளி லனேகவிதங்களாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

88. விபூதியென்ற பிரம்ம, விஷ்ணு, ருத்திரன், நவப்பிரஜாபதி முதலானவர்களால் சிருஷ்டியென்றும் மாயையினாலே சிருஷ்டி யென்றும் காலத்தினாற் சிருஷ்டியென்றும், போகார்த்தம் சிருஷ்டியென்றும், இச்சாமாத்திரம் சிருஷ்டியென்றும், கிரீடார்த்தஞ்சிருஷ்டியென்றும ஈசுவரனுடைய சுவபாவமிது வென்றும், இன்னுமனேக விதங்களாகப் புராணங்களிற்சொல்லப்பட்டிருக்கிரது. இத்தனைவிதமும் முன் சொல்லப்பட்ட சிருஷ்டியை யனுசரித்தேயிருக்கும். இதுவே சிச்சக்தியினுடைய வுல்லாஸம். இவ்வித ஸ்தூல ஸூக்ஷ்ம சிருஷ்டிகளான சரீரங்களை விராட்ஹிரணியகர்ப் பேசுவராள ஸம்ரக்ஷித்து கொண்டிருந்தார்கள்.

89. அண்டத்திலுள்ள வெழுவகைத் தோற்றங்களும், ஜடஸ்வபாவங்களாகையால் சலனமன்றியிலிருந்ததைப் பார்த்து, ஜடசக்திமாயாதிஷ்டான சிச்சக்தி வலிதமான நிர்க்குணப்பிரம்மமாய் விளங்குஞ் சிச்சக்தி யிதுகளைச் சேதனஞ் செய்வி்ச்சித்து, ஸ்வஸாமர்த்தியத்தினால், நிர்க்குணப்பிரம்மமேகாம் சத்தில், அனேக சிதம்சங்களாக வாக்கி, அண்டாவரண மோகாந்தகாரப் பிரம்மாண்டத்தையும், சரீரப்பிரம்ம ரந்திரங்களையும் பேதித்துக் கொண்டு, ஒவ்வொரு சரீரங்களுக்கும் பிரதக் பிரதக்காக

அனுப்பிரவேசஞ் செய்வித்து அதின் மயமாகவே தானும் விளங்குகின்றது.

90. பிரதி சரீரங்களிலுமனுப் பிரவேசித்தசிதம் சம் நீவார சூகம், வாலாக்கிரம், பிரம்மபுச்சம், கூடஸ்தன் துரீயம், பிரத்திய காத்மா ஜீவனென்ற நாமங்களால் விவகரிக்கப்பட்டு, சரீரத்தோடு கூடின மாத்திரம் ஜடவுருவமான சரீரங்கள் தன் தன் கார்யங்களை, யததுகள் செய்ததுகள்.

91. சிதம்சம்ஸர்வக்ஞபாவ முடையதானுலு மாயாவேசத்துடன் கூடி வியஷ்டிசரீரத்திற்பிரவேசித்து, அதன் மயமாகிவிட்டபடியால்அதனுல் மோகத்தை யடைந்து, தன் சித்ஸ்வபாவத்தைமறந்து, சரீரவுருவமான, ஜீவனே தானென சரீரத்திரையவுருவமேயாகி, கர்த்திருத்வ போக்திருத்வதிருஷ்டிருத்வங்களை யடைந்து கர்மங்களைச்செய்து அந்த பலன்களைத்தன்னதென் றபிமாணித்த வாஸனையால்,ஜாக்கிற, ஸ்வப்பன, ஸுஷுப்தி, மூர்ச்சாமரணமென்ற, ஐந்தவஸ்தைகளையு மடைந்து, கர்மவாஸனுபல மனுபவிக்கவேண்டி, மருஜன்மமடைய கர்ப்பவாஸ முதலான துக்கங்களோடு கூடி, கீழ்மேலுலகங்களிலுள்ள வெழுவகைத் தோற்றங்களிற் சென்மங்களடைந்து, பிரளய பரியந்தம் சுழன்று பிரளய காலத்திற்றன் ஜீவவாஸனையுடன், மெழுக்குருண்டையிற் சுவர்ணரேணுக்களடங்கினது போல, அவ்வியக்த ஜடமாயா சக்தியிலடங்கியிருந்து, திரும்பவும் மாயாசக்தி பிரிந்து பிரபஞ்சாகாரமடைந்த போது,சிருஷ்டியிலுள்ள வெழு

வகைத் தோற்றங்களிற்றன் வாஸனைக்குறிய சரீரங்களிற் பிரவேசித்து, முன்போலவே சுழன்று கொண்டிருப்பன். இவனெத்தனை பிரளயங்களிலடங்கி வந்த போதிலும் நித்தியனே. சிதம்சமானதால் நாசமில்லை, இவன் பஞ்சகோசத்துக்கு வேறுபட்டவனுகி அவஸ்தாத்திரையஸாக்ஷி தேகத்திரைய விலக்ஷண ஸச்சிதானந்தஸ்வரூபபிரம்மாம்ச மாயிருந்த போதிலும்,தன் சுவரூபமரந்து ஸ்தூலஸூட்சுமகாரண தேகங்களே தானென்றபிமானித்துத், தன் மயாகங்காரனுய் விட்டபடியால், அசுத்தாக்ஞான கிஞ்சிக்ஞசுவரூபனாகவே விளங்குவன்.

92. இந்த சித்ரூப ஜீவனுக்கு எழுவகைத் தோற்ங்களிலும் பெரிதானது மானிட ஜன்மம், அதிலும் தாமத, ராஜத,ஜன்மங்கணீங்கி, ஸத்வகுணத்தில் ஸத்வகுணப் பிரதான ஜன்மம்வந்தகாலத்தில், மேற்சொன்ன ஸகலசாஸ்திரங்களேயும், ஸகல மதங்களேயும் பரிசீலித்துப் பார்த்து, பிரவிருத்தியுண்டானவனுகித், தான் சுத்தசைதன்னியத்தில் விதேக மோக்ஷமடையாத பக்ஷத்தில், ஜன்மபந்த நாசமுருதென்ற புத்தியுடையவனுக்கு தபஸ், கர்ம்மம், தானம், தீர்த்தயாத்திரை, வைராக்கியம், பக்தியோக முதலான துகளால் விதேகமோக்ஷமுண்டாக மாட்டாதென்றும், இவைகளெல்லாம், உத்தமவுலகங்களிலுத்தம ஜென்மங்களேக் கொடுக்கக்கூடியதுகளென்றும், இவைகளேயெல்லா நீக்கி சுத்த மோக்ஷமடைவதர்க் கியாதுபாயமோ, அதைப்பரிசீலித்துக் கொண்டிருப்பவனே

முக்கிய மோக்ஷயிச்சையுடையவனுவன். அவனுக்கே ஸாது சங்கதியுஞ் சத்சாஸ்திரமுங்கிட்டும். அதனுல் சுத்தஸத்துவமான நிர்க்குண துரீயரூபாகிகுணவடிவாயும், மூன்று தேகங்களாயும், மூன்றவஸ்தைகளாயும் உள்ள, அந்தக்காண சிதாபாஸ விந்திரிய விருத்திகளை ஸாக்ஷியாயிருந்து பார்க்கக்கூடினவனுயும், அந்தக் கரணந்தன்னை யவலம்பித்துக்கொண்டு, முன்றவஸ்தாருப ஸுகதுக்க போகங்களியாவையும், அவைகளனுபவிக்கும்போது, தான் கூடவிருந்தே அவைகளுக்குப் பிரகாசத்தையுமுன்பின்னனுபவிக்கக்கூடிய ஸ்புரணசக்திகளும் விளக்கி அவைகள் தானுகவே விளங்கினபோதிலும், ஸூர்யப்பிரபை ஸமஸ்த பதார்த்தங்களிலும் வியாபித்து உஷ்ணத்தையுங் கொடுத்துத் தன்மயமாயதுகளிலுள்ள ரஸங்களை கிரகித்துத் தன் வசமாயிருந்த ரஸங்களை வெளிக்காட்டாமல், உஷ்ணகிரண சுவபாவத்துடன் விளங்கி, மருபடி வருஷரூபமாயந்த ரஸங்களை நீக்கி விடுகிற ஸாமர்த்தியமுடைய சூர்யனைப்போல, ஸமஸ்தத்தையு மனுபவித்தும் தனக்குச் சம்மந்தமில்லாத சாமர்த்தியமுடையவனுகியும், ஸமஸ்த வஸ்துக்களையும் புஜித்து வஸ்துக்களின் சுவரூபஹானியாக்கி தான் பிரதக்காகவான வக்கினியைப்போல, தான் ஸகலத்தையும் புஜித்தும், தானதில் சம்மந்தமற்றவனுகித் தான், ஸங்கமில்லாதவனுயும் தன்னுடைய வியாபகத்தாலும் அந்தக்காணுதிகளை யனுபவித்து அதுகளை திருப்தியடைகிற தெ

முக்கிய மோக்ஷயிச்சையுடையவனுவன். அவனுக்கே ஸாது சங்கதியுஞ் சத்சாஸ்திரமுங்கிட்டும். அதனுல் சுத்தஸத்துவமான நிர்க்குண துரீயரூபநாகிகுணவடிவாயும், மூன்று தேகங்களாயும், மூன்றவஸ்தைகளாயும் உள்ள, அந்தக்காண சிதாபாஸ விந்திரிய விருத்திகளை ஸாக்ஷியாயிருந்து பார்க்கக்கூடினவனுயும், அந்தக் கரணந்தன்னை யவலம்பித்துக்கொண்டு, முன்றவஸ்தாருப ஸுகதுக்க போகங்களியாவையும், அவைகளனுபவிக்கும்போது, தான் கூடவிருந்தே அவைகளுக்குப் பிரகாசத்தையுமுன்பின்னனுபவிக்கக்கூடிய ஸ்புரணசக்திகளும் விளக்கி அவைகள் தானுகவே விளங்கினபோதிலும், ஸூர்யப்பிரபை ஸமஸ்த பதார்த்தங்களிலும் வியாபித்து உஷ்ணத்தையுங் கொடுத்துத் தன்மயமாயதுகளிலுள்ள ரஸங்களை கிரகித்துத் தன் வசமாயிருந்த ரஸங்களை வெளிக்காட்டாமல், உஷ்ணகிரண சுவபாவத்துடன் விளங்கி, மருபடி வருஷரூபமாயந்த ரஸங்களை நீக்கி விடுகிற ஸாமர்த்தியமுடைய சூர்யனைப்போல, ஸமஸ்தத்தையு மனுபவித்தும் தனக்குச் சம்மந்தமில்லாத சாமர்த்தியமுடையவனுகியும், ஸமஸ்த வஸ்துக்களேயும் புஜித்து வஸ்துக்களின் சுவரூபஹானியாக்கி தான் பிரதக்காகவான வக்கினியைப்போல, தான் ஸகலத்தையும் புஜித்தும், தானதில் சம்மந்தமற்றவனுகித் தான், ஸங்கமில்லாதவனுயும் தன்னுடைய வியாபகத்தாலும் அந்தக்கரணுதிகளே யனுபவித்து அதுகளே திருப்தியடைகிற தெ

சித்சக்தியை யாராதிப்பது, நிர்க்குணமான துரியன் அந்தக்கரண வடிவமாகி ஸகுணமான பராசக்தியைப் புருஷவடிவமாகவாவது, ஸ்திரிவடிவமாகவாவது தியானஸ்தோத்திர, ஜபதப, யோக பூஜா விதிகளோடும், அந்தக் கரண பிராரப்த, ஸுக துக்கங்களோடும் கூடியனுபவித்துக்கொண்டு, ஆராதிப்பது பாஹ்யமாகும். அதிரண்டு விதம், அதாவது அந்தப் பிரம்ம சக்தியே பிரபஞ்சத்தை சிருஷ்டிக்க முதலில் பிரகிருதிவடிவாயும் புருஷ வடிவாயு மாகி பிரகிருதி புருஷாத் மகமான வடிவத்தை யுடையதாகி, ஜகத்ஸிருஷ்டியாதிகார்யங்கள் நடத்துவதில், பிரகிருதியே பெண்வடிவாயும் புருஷனேயாண் வடிவமாயுமங்கீகரித்து, பெண்ணுருவஉபாஸ்தையைசக்தியுபாஸ்தை யென்றும், புருஷோபாஸ்தைசிவாதிரூப வுபாஸ்தை யென்றும் இருவிதங்களாகவிருக்கும். புருஷோபாஸ்தைக்கு சிவ விஷ்ணுவாதி புருஷாகாரங்களே, பிரம்மமென்றும் பெண்வடிவான லலிதா முதவான ஆகாரங்களே பிரம்மமென்றும் தாத்பறியத்துடனுபாசிப்பார்கள். இவ்விருவிதமும் பூர்வபட்சமே.

95. சக்தியுபாஸ்தையில் வாமம் தக்ஷிணமென விருவிதங்களுண்டு, அதில் தக்ஷணமாவது வேதோக்த கர்மானுஷ்டானப்பிரகாரம், சுத்தத்திரவவியங்களுடன் அனுஷ்டித்து வருவதேயாம்.

96. வாமமாவது, ஆகமாதி விதிகளின்படி மதுமாம்ஸாதி பஞ்சத்திரவியங்களால் அனுஷ்டித்து

வருவதேயாகும் இது கலியில் பிராம்மணருக்குக்கூடாதென்றும் பாராசரஸ்மிருதியால் விலக்கப்பட்டிருக்கிறது. தேவியுபநிஷத்துக்களால் சக்தியை வாமாசாரத்தினுலுபசரிக்கச்சொல்லியிருக்க, நிஷேதமெமென் பதெப்படியெனில் யுகாந்திர பேதங்களிலிருந்தபோதிலும்க்ஷத்திரியாளுக்கு முக்கியமேபோழியபிராம்மணர்களுக்கு யுகாந்தரகளிலேயும் கௌணந்தான் ஆனதாற்கலியில் நிஷேத முசிதமே. சுத்த ஸத்வகுணப்பிரதானமுடையபிராம்மணர்கள் சக்திபேதங்களான அனேகாவசரக்களை தக்ஷிணமார்க்கத்தாலேயே யாராதிப்பார்கள்.

97. புருஷோபாஸ்தையில் வாமாசாரங் கிடையாது. இவ்விருவகையுபாஸ்தைகளும் பிரம்மோபாஸ்தையாக விருக்க, பூர்வபக்ஷமென்பதெப்படியெனில் பிரம்மமோராகிருதியாயுமாகாது இருந்தபடியேயிருக்கும் பிரம்ம ஸாமர்த்தியமான சித்சக்தி,அனெகாகிருதிகளையாக்கி அழிக்க வல்லமையுடையதாதலால் சிச்சக்தியினுலுண்டுபண்ணின ஆகிருதிகள் பிரம்மமாகாது. ஆகிருதிகளுக்கும் பிரம்மத்துக்கும்மத்தியில் விளங்குகிற சித்பிரகாச சாமர்த்தியமானபரதேவதையே இப்படிஸ்திரிபுருஷவியக்தியாக விளங்குகிறதென்றறிந்து, பிரம்மசக்தியை இவ்விதவுருவங்களாகவுபசரிப்பதே ஸ்ரீவித்யோபாஸ்தையாகும் இதுவேரஹஸ்யம் காமிகளுக்கிந்த வாராதனை புண்ணியபலங்களாகும்.

98. நிஷ்காமிகளுக்கு ஆத்மவிசாரணையால், அந்தக்கரணவுருவமான சகுணாராதன முதலானதும்,

அசம்பிரக்ஞாத சமாதியினுல் அஸங்கமாய் செய்து வந்த பிரயோஜனத்தால், சுத்தஸத்துவ நிர்குண துரியஸ்வரூபமாவதே பிரயோஜனமாகும் இதர்க்கே சித்தசுத்தியென்றர்த்தம்.

99. ஆந்திரமாவது, பிரகிருதி மோகாவரணத்துக்கப்புறப்பட்ட ஸத்தியக்ஞானனந்த வகண்டப்பிரகாசமாய் விளங்குகின்ற சித்சோதியை, குருவனுக்கிறகப் பிரமாணப்படி ஊர்த்துவ திருஷ்டியால், தன் சிதம்சப்பிரகாசத்தில் அஞ்ஞானசம்மந்தமலராகிதனுய் அம்சமாகப்பிரவேசித்த காலத்திலுள்ள ஸ்திதியாகி, சுத்தசத்துவவிருத்தியால் பரதேவதையை நிதித்தியாஸன சமாதியனுசந்தான யோகியாய் விளங்குவதே ஸம்பிரக்ஞாத ஸமாதியென்ற ஸ்ரீவித்தியோபாஸ்தையே ஆந்தரமாகும். இது பிரம்மானந்தானுபவத்துக்கும், பாஹ்யவுபாஸ்தை ஸத்புருஷக்கிரமத்துக்கும் ஹேதுவாகும்.

100. இந்த ஞான ஸத்புருஷக்கிரமத்தை யறிந்தனுபவிப்பதற்கு, 108 உபநிஷதங்களே பிரமாணமாகும். இதுதவிர முன்சொன்ன சாஸ்திராதிகளின் விசிஷ்டானுபவமும், கர்மபலத்துக்கே உபயோகம். 108உபநிஷதங்களும் நாநாமதங்களா யிருக்கிறபடியால், எல்லாவற்றையுமொப்புக் கொள்ளும்பட்சத்தில், நிர்ணயதத்துக் கேதுவில்லை. மோக்ஷாதிகாரிகளுக்கு ஸகலசாஸ்திரங்கங்களி னேகவாக்கியதையை யறிந்த ஸ்ரீ பகவானுல் அர்ச்சுனனின்பொருட்டு உலகசம்ரக்ஷணர்த்தமாய் ஸ்ரீ பகவத் கீதையென்ற ஸ்மிருதி சொல்லப்பட்டது.

101. ஏற்கனவே ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின்பொ ருட்டு உலகசம்ரக்ஷணார்த்தமாய் குருசிஷ்ய ஸம் பிரதாயப்படி, ஸகல சாஸ்திர தாற்பரியங்களின் ஏகவாக்கியத்தையரிந்த ஸ்ரீவஸிஸ்டரால் வாஸிஷ்ட மும் சொல்லப்பட்டிருக்கிறது.

102. மேற்சொன்ன ஸகல சாஸ்திரார்த்தங்களி னேகவாக்கியதயை யறிந்த ஸ்ரீவெதவியாஸரால் வி யாஸ சூரித்திரமும் செய்யப்பட்டிருக்கிறது. இம்மூ ன்றுமொரே அபிப்பிராயமானவைகள்.

103. சாஸ்திரங்களுக்கே, ஸதஸ்யார்த்தம், இர கசியார்த்தங்களென இரண்டு விதங்களுண்டு. ஸத ஸ்யார்த்தமாவது, ஷடங்கங்களோடு கூடினமீமாம் சாதிதர்மங்களின்படி வாதிகளைக்கண்டித்துத்தங்கள பிப்பிராயமான மதங்களை ஸ்தாபிப்பதாம். இது வாதி யிலுடைய பலத்தைப்பொருத்ததாகும். இரகசியா த்தமாவது, ஸ்வருபஸ்திதியை உள்ளபடியே யறிய க்கூடியதாயும், அதிற்பரம மோக்ஷமடைவதற்குள்ள வுபாயங்களைக் காட்டிக்கொடுக்கக்கூடியதுமாகும்.

104. ஸ்ரீ சங்கராசாரியரால் 108 உபநிஷதங்க ளுள் ஈச, கென. கட, பிரச்ன, முண்டக, மாண் டுக்கிய, ஐதரேய, தைத்தரீய, சாந்தோக்கிய, பிரக தாரண்ணியங்களெனப் பத்துபநிஷதங்களுக்கும், ஸ்ரீ வியாஸ சூத்திரத்துக்கும், ஸ்ரீபகவத்கீதைக்கும், இர ஹஸ்யார்த்த கர்ப்பிதமான ஸதஸ்யார்த்த பாஷ்யஞ் செய்து வாதிகளைக்கண்டித்து. அத்வைத மதத்தை ஸ்தாபித்தார். அத்வைத மென்பது பரோக்ஷக்ஞா

னஸித்தியால் பிரம்ம உலகமடைந்து பிரம்மதேவ ஞேடு பிரம்மத்தில் ஒன்ருகவே ஐக்கியமாவது. பிறகு ஸ்ரீ ராமானுஜாசாரியர் மேற்சொன்னவைக ளுக்கெவிசிஷ்டாத்வைத பாஷயம் செய்திருக்குரார்.

105. விசிஷ்டாத்வைத மென்பதற்கு ஈசுவரஸ மானவுருவமடைந்து வைகுண்டாதிபதங்களில், ஸே வ்விய ஸேவக பாவத்தோடு ஆனந்தானுபவமனுபவி ப்பதென்பது தார்ப்பரியம். ஸ்ரீமத்வாசாரியரவர்க ளால் மேற்சொன்ன மூன்றுக்கும்த்வைத பாஷ்யஞ் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது. இஹத்திலெ ந்தெந்த உருவஸ்திதியை யெந்தெந்த ஜீவனடைந் தானே அந்தந்த பாவப்படியே பரலோகத்தில் அ ந்தந்த உத்தமசரீரங்களை யடைந்து வைகுண்டா திபதங்களில் கைங்கரியபராளாக இருந்தானந்தம டைவ தென்பது தார்ப்பரியம்.

106. இவ்வித சாஸ்திரார்த்தங்களோடு கூடின தார்ப்பரியங்கள், புத்திமான்களினுலேயும் அனேக பாஷைகளில் அனேக கிரந்தங்கள் செய்யப்பட் டுமிருக்கிறதுகள். இதுபரியந்தம் இரகசியார்த்த கர்பிதமான ஸதஸ்யார்த்தமாகும்; ஸதஸ்யார்த்த கர்ப்பிதமான ரகசியார்த்தங்களை விவேகிகள் சுலபமாகவறிந்து, இகத்திலேயே மோக்ஷானந்த மனுபவிக்க ஹேதுவான, விவேகசூடாமணி, ஆ த்மபோதம், ஸ்வாத்மப்பிரகாசிகை, போதாரியை, அத்வைத மகரந்தம், வாக்கியவிருத்தி, முதலான அனேகப் பிரகரணங்கள், ஸ்ரீசங்கராசாரியரால் செ ய்யப்பட்டுமிருக்கிறது, தவிர, வாஸிஷ்டம், பகவத்

கீதை, 108 உபநிஷத்துக்கள் இவைகளின் இரகசியார்த்தங்களைப் பரிசீலித்தரிந்தனுபவித்த மகான்களால் திவ்வியானந்தானுபவமுண்டுபண்ணக்கூடிய கிரந்தங்களை பாஷாந்திரங்களிலும் வெகுவாகச் செய்யப்பட்டுமிருக்கிறது.

107. மோக்ஷயிச்சையுள்ள விவேகளிவ்வளவையும் விசாரித்தறிந்து தனக்கபரோக்ஷானுபவமுண்டாகக்கூடியதான, ரகசியார்த்த கிரந்தங்களை குருமுகமாக விசாரித்து, சிரவணாதி பூர்வமாக ஆனந்தானுபவ மனுபவிப்பார்கள்.

108. உத்தர கீதையில் ஸ்ரீபகவானால், சாஸ்திரங்களனந்தம். அறியவேண்டியது வெகு, காலம் சுவல்ப்பம், விக்கினம் மிகுதி. ஆனதால் நீருடன் கலந்த பாலைமாத்திரம் ஹம்ஸம் கிரகித்ததுபோல, ரகசியார்த்த ஸாரபூதமான ஒரு கிறந்தத்தினாலேயே, ஸகல சாஸ்திரங்களுடைய தாத்பரியமும், ஆத்மனாத்ம விவேகத்தோடு பிரம்மஸாக்ஷாத்கார மடையுந் தாத்பரிய மேதவிர, வேரில்லையெனவரிந்து தானப்பியசிக்கும் ஸாரபூதமான வொருசாஸ்திரத்தினாலேயே, பிரம்மானந்தானுபவ முண்டாகுமென்பது திண்ணம்.

108. பிரம்மானந்தானுபவமின்றி சாஸ்திராம்பியாசபாண்டித்தியத்தோடுமட்டில் விளங்குகிரவர்கள் பாகரசங்களைக் கலக்கி, யதிற்கிடந்துழலுகிற கறண்டி எப்படி யந்த ரசமறியாதோ, அவ்வண்ணமேயென்று ஸ்ரீபகவானாற் சொல்லப்பட்டிருக்கிறது.

109. பரதத்வத்தைக் குருமுகமாக விசாரித்து அனுபவானந்தத்தைத் தெரிந்துகொள்ளாதவன், அவனாலப்பியசிக்கப்பட்ட சாஸ்திரம் நிஷ்பலமென்றும் தெரிந்தவருக்கு சாஸ்திராப்பியாசம் நிஷபலமென்றும், சப்தஜாலமான சாஸ்திராரண்ணியத்திற் பிரவேசித்து வழி தெரியாது சுழலுகிறவன் ஆத்மலாபமுறுனென்றும், நிராசையான, சுத்தஸத்துவ, புத்திரூபமாகாதவனாயில்,ஷட்சாஸ்திரமும் தெரிந்தவனானலும், அவன் முக்திக்கனர்கனௌென்றும், அக்ஞானமாகிற ஸர்ப்பந்தீண்டினுல், பிரம்மஞ்ஞானமென்ற ஔஷதம் தவிர, வேத சாஸ்திரங்களினுலும், இதரமந்திரௌஷதங்களினுலும், விஷமிரங்காதென்றும், பிரயத்தின பூர்வகமாய்த் தத்வக்ஞானிடம் சேர்ந்து, ஆத்மதத்வந் தெரிந்துகொள்ளாதவரையில், ஆத்ம லாபம் கிட்டாதென்றும் மகத்துக்கள் சொல்வார்கள். அத்யாத்ம சாஸ்திர விசாரமே ஞானமென்றும், அதிலேயே ஞேயமான பரமாத்மா காணப்டுவாரென்றும் மற்றவைகளெல்லாம் வியர்த்தமென்றும், வஸிஷ்டர் வாமதேவர் முதலிய தத்வ வேத்தாக்களினாலேயும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதால் விவேகிகள் ஸாரபூதமலான அத்யாத்ம சாஸ்திரத்தை விசாரித்து, அதின்படி சிரவணுதிகள்செய்து ஆத்மானந்தானுபவமனுபவிப்பதே முக்கியமாகும்.

முற்றும்.